# ஜெயில்

ராமசாமிக்கு நாலைந்து பெயர்கள் உண்டு. நெட்டைக்கொக்கு ராமசாமி, வளந்த பனை ராமசாமி, பீச்சாங்கை ராமசாமி, இன்னும் சுருக்கமாக ஒட்டகம், ஏணி, மண்டு... இப்படி! பயல் ஒசரமாய், ஒல்லியாய் இருப்பான். இப்போ நேரம் என்ன இருக்கும்; பள்ளிக்கூடம் விடுகிறநேரம் இருக்குமா? ராமசாமி வேப்பமரத்து நிழலைப் பார்த்தான். 'இன்னும் ஒரு நாலு விரக்கடை போகணும்.'

அவன் மரத்தில் ஏறினான். தூக்குவாளியையும் பைக்கட்டையும் எடுத்துக்கொண்டான், பள்ளிக்கூடத்து மணி 'கணகண' என்று ஒலித்தது, ஆனந்த மிகுதியால் சிரித்துக்கொண்டான். தூரத்தில் பிள்ளைகளின் தலை தெரிந்தது. ஒற்றையடிப் பாதையூடே அவர்கள் வந்துகொண்டிருந்தார்கள். முன்னால் வருகிறது வீராசாமிதானே; ஆமா வீராசாமிதான். பைக்கட்டை இடத்தோளில் போட்டுக்கொண்டு, வலக் கையில் தொங்குகிற தூக்குவாளியை முன்பக்கத்துக்குக் கொண்டுவந்து, நடக்கும்போது இரண்டு முட்டுகளிலும் தட்டும்படி ஓசை எழுப்பிக் கொண்டே நடந்து வந்தான். நடுவில் வருகிறவன் சுப்பையா. வலு குட்டையன் நடந்துகொண்டே வரும்போது திடீரென்று 'சடன் பிரேக்' போட்டு நின்று விடுவான். பின்னால் வருகிற பையன்களெல்லாம் அவன்மீது மோதுவார்கள். இப்படி அடிக்கடி செய்கிறதில் அவனுக்கு ஒரு குஷி. கடைசியில் வருகிறது, டி.முருகன், கடை திருப்பதி செட்டியாரின் மகன். பயல்கள் அவனை சர்வ கேலி பண்ணுவார்கள். பள்ளிக்கூடத்தில் அவன்தான் முதல் மார்க். முன்பல் இரண்டு நீளமாக இருப்பதால் வாயைக் கையால் மூடிக்கொண்டு சிரிப்பான்.

ராமசாமி கிளையோடு கிளையாய்ச் சேர்ந்து மரநாய் போல் ஒட்டிக்கொண்டான். பையன்கள் கொஞ்சம் தொலை கடந்து போன பிறகு, மெள்ள இறங்கி வந்து தன் ஊருக்குப் புறப்பட்டான்.

காலையில் எழுந்ததும் ராமசாமி கால்கை கழுவிக்கொண்டு ஒரு லோட்டா நீத்து தண்ணீர் குடித்துவிட்டு, எருமை மாட்டை அவிழ்த்தான். ஊர்க்கம்மாய்க் கரையில் பத்தி விட்டுவிட்டு, கரையிலிருக்கும் நவ்வாப்பழ மரத்தின்மேல் ஏறிக்கொண்டான். பனிப்புல்லை மாடு சுகமாய் மேய்ந்துகொண்டிருந்தது. ராமசாமி பழங்களைப் பறித்துப் பைநிறையப் போட்டுக்கொண்டு பக்கத்திலுள்ள புன்னரசி மரத்துக்கு வந்தான். புன்னரசி மரத்தின் கிளைகளிலிருந்து நீள நீளமான விழுதுகள் சன்னமாக பெண்களுடைய கூந்தலைப்போல் தொங்கிக்கொண்டிருந்தன. நெருங்கிய கிளையிலிருக்கும் இரண்டு

கோவைகளைச் சேர்த்து அவன் ஒரு படு முடிச்சுப்போட்டு, அதில் ஏறி உட்கார்ந்துகொண்டு, ஊஞ்சல் ஆடினான். ஆடிக்கொண்டே நவ்வாப் பழங்களைத் தின்றான். அவனுடைய சக மாடோட்டிகள் அப்பொழுது தான் அங்கு வந்து அவனோடு அந்த விளையாட்டில் கலந்து கொண்டார்கள். வெண்மை நிறமாக இருந்த காலைநேரம், கொஞ்சம் கொஞ்சமாகத் தங்கநிறத்துக்கு மாறிக்கொண்டிருந்தது. மேலே, நவ்வாப் பழத்துக்கும் அத்திப்பழத்துக்கும் சத்தமிட்டுக் கொண்டிருக்கும் பறவைக் கூட்டங்களின் ஒலிகள் வரவர முற்றிக்கொண்டே வந்தன. கம்மாய்த் தண்ணீரில் கண்ணைப் பறிக்கும் பிரகாசமான நீண்ட ஒரு கோடு தெளிவில்லாமல் அலைகளால் அலைக்கழிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. பையன்கள் எல்லோரும் கம்மாய்க்குள்ளிருந்து எருமை மாடுகளை ஒன்று சேர வெளியே பத்தினார்கள். நிலத்தில் ஈர நீர் சொட்ட 'கன்னங்கரேல்' என்று மந்தையாய் எருமைகள் அந்தக் கிராமங்களின் தெருக்களை அடைத்துக்கொண்டு சென்றன. ராமசாமி, தொழுவில் மாட்டைக் கட்டினான். செங்கமுட்டியை உரசிப் பல் தேய்த்துவிட்டு, கம்மஞ்சோற்றில் மோர்விட்டுக் கரைத்துச் சாப்பிட்டான். தாயார் தூக்குச் சட்டியில் சோறு வைத்துக் கொடுத்தாள். மத்தியானத்துக்கு வாங்கித்திங்க ஒரு கூறு பருத்தியும் கொடுத்தனுப்பினாள். அதற்கு முன்னதாகவே ராமசாமி வீட்டிற்குள் போய்க் கொஞ்சம் பருத்தி எடுத்து ஒளித்து வைத்திருந்தான். தாயார் கொடுத்த பருத்தியோடு அதையும் சேர்த்து பைகட்டுக்குள் திணித்து வைத்துக்கொண்டான். எண்ணெய் தேய்த்துத் தலை சீவிக்கொண்டு பக்கத்து ஊருக்கு படிக்கப் புறப்பட்டான். போகும்போது தாயார் புத்தி சொல்லி அனுப்பினாள். "வழியில் விளையாடிக் கொண்டிருக்காதே. பிள்ளைகளோடு சண்டை போடாதே. நல்லா படிச்சு கெட்டிக்காரன் ஆகணும்."

"சரிம்மா, சரி...சரி .. சரி" என்று தலையை ஆட்டிக்கொண்டே நடந்தான்.

வருகிற பாதையின் மத்தியில், – அதை இரண்டு ஊருக்கும் எல்லை என்று சொல்லலாம். கொஞ்சம் தள்ளி ஓர் அருமையான வேப்பமரம். தூரத்திலிருந்து பார்த்தால் ஒரு பெரிய பந்துமாதிரி தெரியும். அந்த வேப்ப மரத்துக்குப் பக்கத்தில் ஓர் ஓடை. அதில் எத்தனையோ நிறத்தில் அழகான மணல்கள். பல நிறமான 'சைஸ்'களிலும் பொடிப் பொடி கற்கள்; உருண்டையாக, கோழி முட்டைமாதிரி; தட்டாங்கல் விளையாடலாம்; ரப்பர் வில்லில் வைத்துத் தெறிக்கலாம். ஈரம் காய்ந்து போன தேறல்களில் மிதித்தால் சில இடங்களில் மண், இலவம் பஞ்சை விட மெதுவாக இருக்கும் பைக்கட்டையும் தூக்கு வாளியையும் வேப்ப மரத்தின் உச்சியில் உள்ள ஒரு கெளளியில் தொங்க விட்டுவிட்டு, கீழே இறங்கி வந்து அந்த ஓடையில் தனிமையில் நீண்ட நேரம் விளையாடிக் கொண்டிருப்பான். அப்புறம் வேப்பமரத்தின் மேலே ஏறிக்கொண்டு மூன்று கிளைகள் நெருக்கமாய்ப் பிரிகிற ஓர் இடத்தில் சொகமாகச் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு மணிக்கணக்காய்க் கீழே விழாமல் தூங்குவான். முழிப்புத் தட்டியபின் கண்களை வெறித்து வானத்தையே பார்த்துக்கொண்டிருப்பான். மனசு வெறிச்சோடிப் போய்க்கிடக்கும். இன்னதுதான் செய்கிறது என்று தெரியாது. கொஞ்சம் முயன்றால்

போதும்; ஆனந்தமாக வெகுநேரம்வரை மனம்விட்டு அழுதுகொண்டே இருக்கலாம். இயற்கை என்னும் வாத்தியார் வானத்தில் இவனுக்குப் பல அருமையான படங்கள் வரைந்து காட்டுவார். கண்ணுக்குத் தெரியாத யாரோ ஒருவன் பஞ்சு வெட்டுகிறான். வெட்ட வெட்ட, தட்டுத் தட்டாய் வானத்தில் அது கிளம்பி வருகிறது. அந்தப் பஞ்சுக் குவியலின் ஊடே... பார்த்துக்கொண்டிருக்கும்போதே ராமசாமிக்குப் பல உருவங்கள் தெரியும். அது தேயும்; தொய்யும்; நீளும்; நகரும்; உருமாறி உரு வரும்! நீல வானத்தில் இப்பொ ஒரு வெள்ளை யானை தெரிகிறது. அச்சுஅசல் அப்படியே ஒரு யானை; தும்பிக்கையை உயரே தூக்கிக்கொண்டு பிளிறுகிறமாதிரி இருக்கிறது. இப்பொ யானையின் முதுகில் கூனல் விழுகிறது. கால்கள் மெலிந்து எலும்பாகிவிட்டன. கூனல் உயர்ந்துகொண்டு வருகிறது. தூக்கிய துதிக்கையின் நுனி வளைவு கொஞ்சம் பருத்து அதில் ஒரு முகம் தோணுகிறது. "ஆ... ஹா; இப்போ ஒரு அருமையான ஒட்டகம்; மீனாட்சி அம்மன் கோயில் ஒட்டகம். ஓ...! ஒட்டகத்தின் தலை கழுத்தோடு போச்சு. அடாடாடா..., கால்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து அந்தக் கூனலுக்குக் கீழே ஒரு தூண் ஆகிவிட்டது. ஆ. . . ! இப்பொழுது ஒரு நாய்க்குடை, அருமையான ஒரு நாய்க்குடை வந்துவிட்டது!" ராமசாமிக்கு மேகங்கள் இப்படிப் படம் போட்டுக்கொண்டிருந்தன. அப்படியே லயித்து, அசந்து, மீண்டும் ஒரு சின்னத்தூக்கம் போட்டான்.

கண் விழித்தவுடன் அவனுக்குத் தாகமும் கள்ளப் பசியும் வந்தன. கடைக்குப்போய் என்னதாவது வாங்கித் திங்கணும் போலிருந்தது. பருத்தியை எடுத்துக்கொண்டு கீழே இறங்கி ஊருக்கு வந்தான். ஒரு வீட்டில் தண்ணீர் வாங்கி ஆசைதீரக் குடிக்க நினைத்தான். அந்த வீட்டில் ஒரு கிழவனார் எந்தப் பள்ளிக்கூடப் பையன்களைக் கண்டாலும் கூப்பிட்டு, 'எத்தனாவது வகுப்பு படிக்கிறாய்' என்று கேட்டுவிட்டு உடனே ஒரு மனக்கணக்குப் போடுவார். அந்தச் சமயத் தில் அவரைக் கொல்லணும்போல இருக்கும். நல்லவேளை அவர் பார்க்கவில்லை. ஊர்க்கிணற்றில் ஒரு பெண் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தாள். வாளி நிறையத் தண்ணீர் வாங்கி, இரண்டு கைகளையும் சேர்த்து 'கோரிக் கோரி' குடித்தான். அப்புறம் அந்தக் கிராமத்தினுள் மூலையிலிருந்த ஒரு கடைக்குப் போனான். பருத்தியைப் போட்டு பக்கடா வேணுமென்று கேட்டான். கிராமாந்தரக் கடைகளுக்கே உண்டான ஒருவகை வாசனை அந்தக் கடையிலிருந்து அடித்துக்கொண்டிருந்தது; பக்கடாவை மடிநிறையக் கட்டிக்கொண்டு புறப்பட்டான். எங்கே போகிறது என்று தெரியவில்லை. அப்படியே பக்கடாவைத் தின்றுகொண்டே லாத்தலாய் நடந்தான். ஊருக்குத் தெற்கேயுள்ள கொட்டாரங் களொன்றில் சுற்றி முள்கம்பியால் கோட்டை வளைத்திருந்தார்கள். அதில் வடமேற்கு மூலையில் ஒரு சாளை. அந்தச் சாளையின் குளிர்ச்சியான சுவர் நிழலில் உட்கார்ந்து கொண்டு ராமசாமி பக்கடாவை ருஜித்துத் தின்றுகொண்டிருக்கும் போது, திடீரென்று ஒரு சின்னக் குழந்தையின் சிரிப்புச் சத்தம் கேட்டு அவன் திடுக்கிட்டான். சுற்றும்முற்றும் பார்த்தான். சாளையை ஒரு சுற்றுச் சுற்றி வந்தான். ஒருவரையும் காணவில்லை. மறுக்கி வேகமாக ஒரு சுற்று வந்தான். அப்பவும் இல்லை, பழையபடியும் அந்த இடத்தில் வந்து உட்கார்ந்து

மெதுவாக, உஷாராக, சுற்றுப்புறங்களைக் கண்களால் பார்த்துக் கொண்டே இருந்தான். இப்பொழுது திரும்பவும் அந்தச் சிரிப்புச் சத்தம் கேட்கவும், கண்டுபிடித்துக்கொண்டான். சாளையின் மேல் சுவரில், உயரத்திலே ஒரு சின்ன சதுர ஜன்னல் இருந்தது. கற்களில் உவர் தள்ளிய இடைகளில் கால் பெருவிரல்களைக் கொடுத்துப் பக்குவமாக ஏறி ஜன்னலைப் பிடித்து முகத்தை அதில் பதித்தான். உள்ளேயிருந்து ஏதோ வாடை 'குப்'பென்று அடித்தது. உள்ளே சூழ்நிலையைக் கண்கள் பழக சில விநாடிகள் பிடித்தன. கூரை முகட்டிலிருந்து ஒரு தூளி தொங்கிக் கொண்டிருந்தது. கறுப்பு மண் சட்டிப் பானைகள் மூலைக்கு ஒன்றாகக் கிடந்தன. நெளிந்துபோன அலுமினியத்தம்ளர், வாலொடிந்த அகப்பை, பிய்ந்துபோன கோரைப் பாய், துருப்பிடித்த தகர மண்ணெண்ணெய் விளக்கு, கிழிசல் துணிகள் இவையெல்லாம் தெரிந்தன. மூன்றுவயது ஆண்குழந்தை பிறந்த மேனியாக வாசல்கதவின் இடுக்கு வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தது. பார்த்துக்கொண்டே இருக்க அந்தக் குழந்தை, திரும்பவும் சந்தோஷத்தால் சிரித்து ஆர்ப்பரித்தது. அந்த இடுக்கு வழியாக எதைக் கண்டு சிரிக்கிறது என்று தெரிந்துகொள்ள வேண்டு மென்று ராமசாமிக்கு ஆவலாக இருந்தது. இறங்கி, சுற்றி அந்தப் பக்கம் போய்ப் பார்த்தான். வேறொன்றுமில்லை; அங்கே நாலைந்து குஞ்சு களுடன் ஒரு கோழி மேய்ந்து கொண்டிருந்தது. அந்தச் சின்னக் குஞ்சு களைக் கண்டுதான் அந்தக் குழந்தைக்கு தாங்க முடியாத ஆனந்தம்.

ராமசாமி திரும்பவும் ஜன்னல் மீது ஏறிப்பார்த்தான். அந்தக் குழந்தை வைத்த கண் வாங்காமல் கதவு இடுக்கு வழியே பார்த்துக் கொண்டிருந்தது. அவனுக்கு, அந்தக் குழந்தையைப் பயமுறுத்திப் பார்க்கவேண்டும்போல் இருந்தது. தொண்டைக்குழியையும் வாயையும் கோரமாக வைத்துக்கொண்டு, ஒரு பயங்கரமான சத்தம் கொடுத்தான். தனிமையில் இருந்த அந்தக் குழந்தை உண்மையிலேயே பயந்து துள்ளி விழுந்தது. ராமசாமி மீண்டும் அதே குரலில் ஒரு சத்தம் கொடுத்தான். பீதி நிறைந்த கண்களால் குழந்தை ஜன்னலைப் பார்த்தது. வீல் என்று கத்திக்கொண்டே சுவரின் மறைவுக்குள் போய் ஒளிந்துகொண்டது.

அந்த ஜன்னல் வழியாக இதுவரை இவ்வளவு பயங்கரமான ஒரு பூச்சாண்டியைப் பார்த்ததில்லை. இந்த ஜன்னல் வழியே சில சமயம் அம்புலி மாமாவைப் பார்த்ததுண்டு. எப்பவாவது சிலசமயம் ஒன்றிரண்டு ஊர்க்குருவிகள் உள்ளே வந்து மெல்ல எட்டிப்பார்க்கும். பார்த்தால் விருட்டென்று பறந்து போய்விடும். குழந்தையின் விசும்பல் ஒலி அவன் உள்ளத்தில் கருணை சுரக்கச் செய்தது. "பாப்பா இந்தா பாரு நான் பூச்சாண்டி இல்லை; அண்ணன் வந்திருக்கிறேன் அண்ணன்". மறைந்துகொண்ட குழந்தை நகரவேயில்லை. அவன் தன் மடியிலிருந்த பக்கடாவில் கொஞ்சம் எடுத்து உள்ளே போட்டான். இப்பொழுதுதான் குழந்தை அவனை நம்பியது. ஆனால் பக்கடாவை எடுத்துக்கொண்டு திரும்பவும் மறைந்துகொண்டது. மீண்டும் ஒரு பக்கடாவைப் போட்டான். எடுத்துக்கொண்டு ஒளிந்துகொண்டது. இப்பொழுது ராமசாமி ஜன்னலைப் பிடித்துக்கொண்டு தலையை மட்டும் மறைத்துக்கொண்டான். மெல்ல எட்டிப் பார்த்தான். குழந்தை தலையை பின்வாங்கியது. அவனும் தலையை மறைத்துக்கொண்டான்.

திரும்பவும் தலையை நீட்டிப் பார்த்தது. இப்படியாக ஒரு சின்ன விளையாட்டின் மூலம், அவர்களுடைய சிநேகம் ஆரம்பமாகியது. தினம் தவறாமல் ஒரு பாய்ச்சல் இங்கே வந்து விளையாடிவிட்டுப் போனால்தான் ராமசாமிக்குத் தூக்கம் வரும். நல்லா நெருங்கிப் பழகினதுக்கப்புறம் அந்தக் குழந்தையிடம் "ஓம் பேரென்ன?" என்று கேட்டான். "எம்பேடா எம்பேடு துப்புடாச்" என்றது. கொஞ்சநேரம் வரை ராமசாமி சிரித்தான்.

"ஓஹோ சுப்புராஜா சரி சரி" என்று சொல்லிக்கொண்டே மீண்டும் சிரித்தான். இந்தச் சிரிப்பைப்பற்றி அது தப்பாக எண்ணிக் கொள்ளும் என்று நினைத்து அதை மறைக்க, "துப்புடாஜ் நான் நாளைக்கு நிறைய இன்னும் பக்கடா கொண்டு வாரேன்" என்று சொன்னான்.

குழந்தை 'சரி' என்று தலையசைத்தது.

ஒரு சமயம் பக்கடாவில் இருந்த மிளகாயைத் தெரியாமல் குழந்தை கடித்துவிட்டுக் காரம் தாங்காமல் கூப்பாடு போட்டது. ராமசாமியால் ஒன்றும் செய்யமுடியவில்லை. அந்தச் சாளையைச் சுற்றிச்சுற்றித்தான் வர முடிந்தது. கதவைத் திறக்கமுடியாது வெளியே கொண்டி போட்டு அமுக்குப் பூட்டு போட்டுப் பூட்டியிருந்தார்கள். பூட்டை இழுத்து இழுத்துப் பார்த்தான். கதவைத் திறக்கமுடியவில்லை. 'உள்ளே தண்ணீர் இருந்தால் குடி' என்று யோசனை சொன்னான். ஐயோ பாவம் இந்தக் குழந்தை! இனி சாயந்திரம்தானே அவனுடைய அம்மா வருவாள். அதுவரைக்கும் என்ன செய்யும், என்று யோசித்துக் கவலைப் பட்டான். வெளியே இருந்தவாறு அந்தக் குழந்தைக்குக் கதை சொல்லுவான். கதையென்றால் பள்ளிக்கூடத்தில் சொல்லித் தருகிற கதை இல்லை. தானே சொந்தத்தில் இட்டுக்கட்டி, கோழி, மயில், புறா, இவற்றை வைத்துக் கதை பின்னுவான். குழந்தை உள்பக்கம் இருந்து கொண்டே ஆவலாய், தாகத்தோடு கதை கேட்கும். சில சமயம் கதை கேட்டுக்கொண்டே தூங்கிவிடும். அது கேட்டுக்கொண்டேதான் இருக்காக்கும் என்று, இவன் சொல்லிக்கொண்டே போவான்; பதில் வராது, "சரி சரி, தூங்கிட்டியா; தூங்கு" என்று சொல்லிவிட்டு, வேப்ப மரத்தை நோக்கி நடையைக் கட்டுவான். நடக்கும்போதே அந்த மீதிக் கதையை தனக்குத்தானே சொல்லிக்கொண்டே நடப்பான்.

ஒருநாள் ராமசாமியின் ஊரைச் சேர்ந்த ஆட்டுக்காரன் இவன் இருந்த வேப்பமரத்துக்கு தழை ஒடிக்க வந்தபோது, இவனைப் பார்த்துவிட்டுப் போய்ப் பெற்றோர்களிடம் விஷயத்தைச் சொல்லி விட்டான். ராமசாமி அந்த வருஷமும் வழக்கம்போல் பெயில் ஆனான், யாரோ 'துர் ஆத்மா'வின் யோசனைப்படி, ராமசாமியைப் பாளையங் கோட்டையிலுள்ள ஒரு கான்வென்டில் சேர்த்துவிட் டார்கள். கவலை என்பதே இன்னதென்று அறியாத ராமசாமிக்கு இப்பொழுது பெருங்கவலை வந்து சூழ்ந்துகொண்டது. இந்தப் பள்ளிக்கூடத்தை விட்டு தப்ப அவனால் முடியாது. சர்க்கஸ் கூண்டு வண்டிக்குள்ளேயே சுற்றிச்சுற்றி வரும் புலியைப்போல் அவன் பள்ளிக்கூடத்துக் கோட்டைச் சுவருக்குள்ளேயே சுற்றி வந்தான். சில நாட்களுக்குள்ளாகவே அவன் தன்னுடைய, தான் பிறந்த கரிசல் மண்ணை நினைத்து நினைத்து ஏங்க ஆரம்பித்தான். அதிகாலையில் பையன்கள் வரிசையாக நடந்து ஆற்றுக்கு குளிக்கப்போவார்கள்.

அந்த ஒரு நேரந்தான் ராமசாமியின் முகத்தில் மலர்ச்சியைப் பார்க்கலாம். ஆற்றுக்குப் பக்கத்திலுள்ள இடத்தில் வானளாவிய மரங்கள் குடியிருக்கும் கொக்கரகுளம் அவன் மனசை மிகவும் கவர்ந்து இழுத்தது. அந்த இடத்தில் பிள்ளைகளோடு போய், ஓடிப்பிடித்து விளையாட அவனுக்கு இதயம் வேகமாக அடித்துக்கொள்ளும். அந்தக்காட்சியே அவனுக்கு ஊரைப் பற்றிய நினைவுக்குக் காரணமாக அமைந்தது.

இப்பொழுது இறக்கைகள் மட்டும் இருந்தால் மயிலைப்போல் பறந்து சென்று அதோ அந்த மரத்தின் குளிர்ச்சியான கிளையில் போய் உட்கார்ந்துகொண்டுவிடலாம். "டேய் ராமசாமி; சைத்தானே, வரிசையில் சேர்ந்துநட" பின்னாலிருந்து ஒரு பெரிய குரல் சொடுக்கியது.

வகுப்பில் ராமசாமி மிகவும் சோர்ந்துபோய் உட்கார்ந்திருந்தான். இடது முழங்கையை, டெஸ்கின் மேல் ஊன்றி அந்தக் கையால் முகத்தைத் தாங்கிக்கொண்டு ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். மரங்களின் தாடிக்கொப்புகளில், அணில்கள் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தன. ஓயாமல் ஒலித்த அவற்றின் ஒலிகளில் தன் செவிகளை ஒப்படைத்திருந்தான்; இப்பொழுதோ கண்களையும் அதன் போக்கில் விட்டுவிட்டான். வகுப்பில் என்ன நடந்து கொண்டிருக்கிறதென்று அவனுக்குத் தெரியாது. கண்கள் அவனையறியாமல் சொருகின. கழுத்தடியில் வேர்வை துளிர்க்க ஆரம்பித்தது. அணில்கள் எழுப்பிய ஒலிகளுக்கு ஏற்ப, அவன் உட்கார்ந்து தூங்கிக் கொண்டே ஒரு கனவு கண்டான்.

அவர்கள் ஊர் குளக்கரையில் வைத்து பண்டிதன் அவனுக்கு முடி வெட்டுகிறான். குளக்கரை இப்பொழுது கொக்கரக்குளத்திலுள்ள வெயில் முகமே பாராத மரத்தடியாக மாறுகிறது. அவனுடைய காதுக்குப் பக்கத்தில் முடிவெட்டுபவனின் கத்திரிக்கோல் ரோமக் கத்தைகளை ஓயாமல் வெட்டித் தள்ளிக்கொண்டு அணிலைப்போல் 'கறுச் கறுச் , கச் கச் கச்; கறுச் கச் கச் கச்' என்று கத்திக்கொண்டே இருக்கிறது. அந்த வழியாகப் போகும் பையன்களெல்லாம் இவனைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். ஏன் சிரிக்கிறார்கள், என்று கவனித்தால், இவன் தலையில் சத்தம்போட்டுக் கத்தரித்துக்கொண்டிருந்தது கத்தரிக் கோல் இல்லை; அணில்! வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த பையன்கள் "ஓ" என்று சிரித்தார்கள். ராமசாமியை ஒரு பையன் தலையைத் தொட்டு எழுப்பினான். ராமசாமி திடுக்கிட்டு விழித்தான். வகுப்பில் சிரிப்பு இன்னும் ஓயவில்லை. வாத்தியார் அவனைப் பெயர் சொல்லி மேஜைக்கு பக்கத்தில் அழைத்தார். "உன் உடம்புக்கு என்ன?" என்று ஆதரவோடு கேட்டார். "காய்ச்சல் சார்" அவனை அறியாமலேயே அவனுடைய வாய் சொல்லிவிட்டது. கிட்ட அழைத்து அவனுடைய உடம்பைத் தொட்டுப்பார்த்தார் வாத்தியார். 'ஜில்'லென்று இருந்தது உடம்பு. "நிஜமாகவே எனக்கு வயிற்றை வலிக்கிறது சார்" என்றான் பரிதாபமாக. வாத்தியார் அன்பான மனிதர். மனோதத்துவம் தெரிந்தவர். சிரித்துக்கொண்டே. சரி போய்ப் படுத்துக்கொள் என்று சொல்லி அனுப்பினார். அவமானம் தாளாமல் வகுப்பிலிருந்து ஓடினான் ராமசாமி. அன்று நாளெல்லாம் யோசித்தான். இங்கிருந்து எப்படியாவது தப்பி ஓடிப்போய்விடுவது என்று முடிவுசெய்தான்.

பகலிலேயே கோட்டையைச் சுற்றி நோட்டம் விட்டான். அந்தப் பள்ளிக்கூடக் கட்டடங்களைத் தீர்மானமாக வெறுத்தான். நேரம் ஆக ஆகத் தன் ஊரின் மேலுள்ள தாகம் மனசைப் பிடுங்கியது. வானத்தில் நாரைக்கூட்டங்கள் சுதந்திரமாக, போர் விமானங்களைப்போல் வரிசையாக அணிவகுத்துப் பறந்துகொண்டிருந்தன.

இரவு சாப்பாட்டு மணி அடித்தது. எல்லாப் பையன்களும் புறப்பட்டுப் போய்விட்டார்கள். தப்பித்துப்போக இதுதான் சரியான சமயம். மணிப்பர்சை மட்டும் எடுத்து கால்சட்டைப் பைக்குள் திணித்துக்கொண்டான். பூனைபோல் அடிமேல் அடிவைத்துப் பதுங்கிச் சென்றான். ஒரு மரத்தின்மீது ஏறி, வெளியே கைநீட்டிக் கொண்டிருந்த அதன் கிளைவழியாக வந்து, கோட்டைச் சுவருக்கு வெளியே குதித்தான். நல்லவேளை; முழங்காலில் ஒரு சிறாய்ப்பு, அவ்வளவுதான். துடைத்துவிட்டுக்கொண்டான். தான் தப்பிக்க கை கொடுத்து உதவிய அந்த மரத்துக்கு தன் கண்களால் நன்றி சொல்லி விட்டு வேகமாக நடந்தான்.

முழங்காலில் வந்த ரத்தத்தைத் துடைத்துக் கல்லில் தேய்த்தான். பிறகு, பிள்ளையைப் போட்டு பலாப்பழம் எடுத்த ஓடை வழியாக இறங்கி ஆற்றின் குறுக்கே கடந்து சிந்துபூந்துறை வந்தடைந்தான் இப்பொழுதுதான் மனசில் கொஞ்சம் நிம்மதி பிறந்தது அவனுக்கு. பஸ் நிலையத்திலுள்ள மிட்டாய்க் கடையில் மிட்டாய் வாங்கிக் கொண்டான். பழங்கள் வாங்கி உண்டான். ராவெல்லாம் பரபரப் போடு பொழுதைக் கழித்துவிட்டு, அதிகாலையில் கோவில்பட்டி போகும் முதல் பஸ்ஸில் ஏறி ஊர் வந்து சேர்ந்தான். பஸ்ஸிலிருந்து இறங்கி தரையில் கால் வைத்ததும் கோபாவேசம் நிறைந்த தன்னுடைய தகப்பனாரின் முகம் ஞாபகத்திற்கு வந்தது. ஏண்டா இங்கே வந்தோம், என்றிருந்தது. நேராக சுப்புராஜ் இருந்த சாளையை நோக்கிப் போனான். போகும்போதே சரியான நீளமான 'சீனிக்கல்' ஒன்றைத் தேடித் தேடிக் கையோடு எடுத்துக்கொண்டு போனான். போனதும் முதல் ஜோலியாக அந்த 'நாறப்பூட்டை' இடது கையினால் உடைத்து, சுப்புராஜ்ஜை, விடுதலை செய்தான். அந்தக் குழந்தையைப் பாய்ந்து எடுத்து ஆரத் தழுவிக்கொண்டான். முத்தமிட்டான். "இந்தா தின்னு" என மிட்டாய்களைக் கொடுத்தான். "என்ன இது? இனிச்சிக்கிட்ட கிடக்கே" என்று கேட்டது குழந்தை பின்பு அது ராமசாமியை ஆச்சரியத்தோடு பார்த்தது. "நீ இத்தனை நாள் எங்கே போயிருந்தே, என்னை விட்டுட்டு?" என்று கேட்டது. இந்தக் கேள்வியை, பரிசுத்த மான அன்பை ராமசாமியால் தாங்கமுடியவில்லை. கண்களில் நீர் முட்டிவிட்டது. 'நான் இனி எங்கையும் போகமாட்டேன் உன்னை விட்டுவிட்டு. உன் பக்கத்திலேதான் இருப்பேன்' என்று சொன்னான்.

"கண் ஆணையா; சாமி சத்தியமாவா?" என்று கேட்டது குழந்தை. "ஆமா கண்ணாணையா; சாமி சத்தியமாகத்தான்" என்று கையடித்துக் கொடுத்தான். குழந்தை நம்பிக்கொண்டது. மதியம் திரும்புகிற வரைக்கும் அவர்கள் விளையாடினார்கள். கதை பேசினார்கள். ஆனந்தமாகப் பொழுதைக் கழித்துக்கொண்டிருந்தார்கள். திடீரென்று சுப்புராஜ் தொலைவில் சுட்டிக்காட்டி "அதோ எங்க அம்மா வந்திட்டாளே" என்று பாடிக்கொண்டே குதித்தான்.

ராமசாமியின் முகத்தில் அருளில்லை. உடைத்து எறியப்பட்ட பூட்டைப் பார்த்தான். சுப்புராஜைப் பார்த்தான். ராமசாமி எழுந்திருந்து ஓட்டம் பிடித்தான். எங்கே ஓடுகிறோம் என்றே அவனுக்குத் தெரியவில்லை. கால்கள் போகிற போக்கில் திரும்பிப் பார்க்காமல் ஓடிக்கொண்டே இருந்தான்.

♦

**ஆனந்தவிகடன்**
**அக்டோபர் 1963**